5-6



|| ஸ்ரீ ராம் ||

# திருநாம ஜபத்தின் மஹிமை





எழுதியவர்:

## சுவாமி ராம்ஸுகதாஸ்

|| ஶ்ரீ ஹரி: ||

# திருநாம ஜபத்தின் மஹிமை



எழுதியவர்:

**சுவாமி ராம்ஸுகதாஸ்**

|| ஸ்ரீ ஹரி: ||

First edition 15,000, 1992

**Price: 1.00**

தமிழாக்கம்: ஸ்ரீ. ஸ்ரீகாந்த சர்மா
பரனூர்.
[வழி] திருக்கோவிலூர்.

கிடைக்குமிடம்:

கோபால் சேவா டிரஸ்ட்,
82, கிருஷ்ணா டாக்கீஸ் ரோடு,
ஈரோடு - 638 003.
தொலைபேசி: 71202, 61668.

வெளியிடுபவர்:

கோவிந்தபவன் காரியாலயம்,
கீதாப்ரஸ், கோரக்புர். (உ.பி.)

பதிப்பாளர்: கீதாப்ரஸ், கோரக்புர் - 273 005.

|| ஸ்ரீ ஹரி: ||

# திருநாம ஜபத்தின் மஹிமை

திருநாமத்திற்கும், அந்த நாமத்தை [பெயரை] உடைய இறைவனுக்கும் யாதொரு வேற்றுமையும் கிடையாது ஆகவே இறைவனையோ, திரு நாமத்தையோ இரண்டில் எதை சிந்தித்தாலும் ஒன்றுதான். இறைவனது திருநாமம் மூன்றுவிதமாக ஜபிக்கப் படுகிறது.

1. **மனதால்** – மனதால் திருநாமங் களை எண்ணுகிறோம். இதை கீதையில் பகவான் *'யோ மாம் ஸ்மரதி நித்யஶ* *[கீதை 8/14]* என்ற இடத்தில் அருளியுள்ளார்.

2. **வாக்கினால்** – வாக்கினால் நாம ஜபம் செய்வதுண்டு. இதை பகவான் கீதையில் *"யக்ஞானாம் ஜபயக்ஞோஸ்மி"* *[கீதை 10/25]* என்ற பதங்களால் தனது ஸ்வரூபத்தைத் தெரிவிக்கிறார். [இங்கு வாக்கு என்பது உதட்டசைவினால் உச்சரிப்பதாகும்.]

3. **கண்டத்தால்** [உரத்த குரலில்] - உரத்த குரலில் நன்றாகக் கீர்த்தனம் செய்யப்படுகிறது திருநாமம். இதை கீதையில் பகவான் *"கீர்த்தயந்த:"* *[கீதை 9/14]* என்ற பதத்தால் வர்ணிக்கிறார்.

கீதையில் பகவான் "ஓம்", "தத்", "ஸத்" என்ற பரமாத்மாவின் மூன்று திருநாமங்களைக் கூறியுள்ளார்– *"ஓம் தத்ஸதிதி நிர்தேசோ ப்ரஹ்மணஸ்த்ரிவித: ஸ்ம்ருத:" [கீதை 17/23].* ப்ரணவத்தை [ஓம் என்பதை] தனது ஸ்வரூபமாகக் கூறுகிறார்.

*"ப்ரணவ: ஸர்வவேதேஷு"* [கீதை 7/8
*"கிராமஸ்ம்யெகமக்ஷரம்"* [கீதை 10/25
என்றும் கூறியுள்ளார். எவனொருவன் இந்த ப்ரணவமெனும் ஓங்காரத்தை உச்சரித்துக் கொண்டும், என்னை நினைத்துக் கொண்டும் உயிர் துறப்பானோ, அவன் பரமகதி பெறுகிறான் என்று [கீதை 8/13] கூறியுள்ளார்.

விஶ்வரூபத்தைக் கண்டு துதிக்குப் போது அர்ஜுனனும் நாம மஹிமை கூறுகிறான், "ஹே ப்ரபோ! அனேக தேவதைகள் தங்களிடத்தில் அஞ்சியவர் களாகக் கரங்களைக் குவித்துக் கொண்டு தங்கள் திருநாமங்களைக் கூறுகின்றனர் [கீதை 11/21]. "ஹே அந்தர்யாமியான ப்ரபோ! தங்கள் திருநாமத்தை கீர்த்தனம் செய்வதால் அனைத்துலகும் மகிழ்கின்றது தங்களிடம் பக்தியை அடைகிறது. தங்கள் திருநாம கீர்த்தனத்தால் ராக்ஷஸர்கள்

பத்து திக்குகளிலும் பயந்து ஓடுகின்றனர். ஸித்தர்கள் அனைவரும் உம்மை வணங்குகின்றனர். இவையாவும் உங்களது பெருமைக்குப் பொருந்தியதே. [கீதை 11/36].

## அறிய வேண்டியது

ஆழ்ந்த உறக்கத்தில் புலன்களனைத்தும் மனதிலும், மனம் புத்தியிலும், புத்தி அஹங்காரத்திலும், அஹங்காரம் அவித்யையிலும் ஒடுங்கிவிடுகின்றன. அதாவது, உறக்கத்தில் அஹம்பாவத்தின் தோற்றம் இருப்பதில்லை. ஆழ்ந்த உறக்கத்திலிருந்து விழித்தெழுந்தவுடனே முதன்முதலில் "நான்" என்ற அஹம்பாவம் தோன்றுகிறது. பிறகு தேசம், , காலம், சூழ்நிலை முதலியன அறியப்படுகிறது. ஆழ்ந்த உறக்கத்தில் இருக்கும் ஒருவனைப் பெயரிட்டழைத்தால், அவன் உடனே விழிக்கிறான். அதாவது அவித்யையில்

அனைத்தும் ஒடுங்கப் பெற்ற நிலையில் இருக்கும் போதும்கூட, அவன் பெயரைச் சொன்னதும் அது அந்த ஆழ்நிலை வரையிலும் செல்லும் திறனுள்ளதாக இருக்கிறது. அதாவது சப்தத்திற்கு அத்தகைய அசிந்திய-சக்தி இருக்கிறது அஜ்ஞானத்தை உடைத்து அஹம் என்பதுவரை எட்டி விடுகிறான் இவ்விதமே தொன்றுதொட்டு உலகில் அஜ்ஞானத்தில் மோஹமடைந்த மனிதன் ஒருவன், குரு முகமாக உபதேசம் கேட்டு [சப்தத்தின் சக்தி] தனது உண்மை உருவை அறிகிறான். அதாவது குருவின் உபதேசமான சப்தம், அவித்யையில் மூழ்கிக் கிடக்கும் மனிதனுக்கும் தத்துவ ஞானத்தை அளிக்கிறது. சப்தத்தின் சக்தி அபாரமானது. புலன்களுக்கு எட்டாத ஆத்மஸ்வரூபத்தையும், அது அடைவிக்கிறதல்லவா! அதைபோலவே முயற்சியுடன் கொண்ட ஈடுபாட்டுடன்

செய்யப்படும் பகவந் நாம ஜபம், அப்படி ஜபிப்பவனுக்கு ஆத்மஸ்வரூபஜ்ஞானத்தை அளித்து, பகவத் ஸாக்ஷாத்காரத்தையும் அளிக்கிறது.

தத்துவமறிந்த ஜீவன் முக்த மஹா புருஷனுடைய முகத்திலிருந்து வெளிவரும் உபதேசத்தை எவன் ஆர்வத்துடன் கேட்கிறானோ, அவனுடைய நடத்தைகள் நல்லவைகளாக மாறி, அஜ்ஞானம் அழிந்து ஞானத்தை அடைகிறான். ஆனால் பொய், கடுமை, வீண்சொல், நிந்தை, பிறரைப் பற்றிய வம்பு முதலிய குற்றங்கள் உள்ளவனுடைய பேச்சின் தாக்கம் மற்றவர்களுக்கு ஏற்படுவதில்லை. ஏனெனில் அவனது நடத்தைகளின் காரணமாக அவனுடைய சப்த சக்தி தடைப்பட்டு விடுகிறது. அவ்வாறே உபதேசிப்பவரிடத்தில் ப்ரமம், ப்ரமாதம், லிப்ஸா, கரணாபாடவம் [குழப்பம், தவறுதல்,

பயனில் ஆசை, திறமையின்மை] என்கின்ற நான்கு தோஷங்கள் இருக்கின்றன.

**ப்ரமம்**:- பேசுபவர் எந்தப்பொருளைப் பற்றி ஆராய்கிறாரோ, அதன் முழுமை யான தத்துவத்தை அறியாமல், அதாவது அவ்விஷயத்தில் சிலவற்றை மட்டுமே புரிந்துகொண்டு பேசும்போது, அவர் குழப்பமடைந்தவரெனக் கூறப்படுகிறார்.

**ப்ரமாதம்**:- உபதேசம் செய்யும்போது கவனமில்லாமல் இருப்பது, சொல்லும் விஷயத்தில் பொறுப்பின்மை, கேட்பவரின் தகுதியைப் புரிந்து கொள்ளாமல் கேட்பவரின் அறிவுத் திறனை எடைபோட இயலாமை முதலான குறைபாடுகளுக்கு ப்ரமாதம் அல்லது கவனக்குறைவு எனப்பெயர்.

**லிப்ஸா:-** புகழ், ஆதாயம், மரியாதை இவை பெறும் நோக்கத்துடனும், கேட்பவர்களிடத்திலிருந்து பணம் பெறும் நோக்கத்துடனும், அவர்களை எவ்விதமாவது வசப்படுத்தி, தனக்கு அனுகூலமாக்கிக் கொள்ளவேண்டும் என்ற ஆசையுடனும் உபதேசம் செய்வது. இது உபதேசிப்பவனிடத்திலுள்ள "பயனில் ஆசை" என்ற குறை ஆகும்.

**கரணாபாடவம்:-** சொல்லும் முறையில் திறமையின்மை, சொல்பவர் - கேட்பவரின் மொழியை அறியாதிருத்தல், கேட்பவருக்கு எளிதில் புரியக்கூடிய வழிமுறைகளை அறியாதிருத்தல் - இதுவே திறமையின்மை என்கிற தோஷமாகும்.

இந்த நான்கு குறைகளும் சொல்பவனிடத்தில் இருப்பின், அவனது உபதேசத்தால் கேட்பவருக்கு ஞானம்

ஏற்படுவதில்லை. இந்த தோஷங்களற்ற சப்தமே கேட்பவருக்கு ஞானத்தை அளிக்கிறது. கேட்பவனும் ச்ரத்தை, நம்பிக்கை, ஆன்மிக அறிவில் நாட்டம், முழுமையான ஈடுபாடு, புலனடக்கம் இவை உள்ளவனாகவும், பரமாத்மாவை அடையும் லக்ஷியமுள்ளவனாகவும் இருப்பின், அவனுக்கு உபதேச சப்தத்தில் இருந்து ஞானமுண்டாகிறது. அதாவது சொல்பவருடைய தகுதிக்குறைவினால் கேட்பவருக்கு உபதேசத்தின் தாக்கம் இல்லாமல் போய்விடுகிறது; அவ்வாறே கேட்பவருடைய தகுதிக் குறைவினாலும், அவருக்கு உபதேசத்தால் பயன் விளைவதில்லை. இருவருக்கும் தகுதி இருந்தால் தான் சொல்பவரின் சப்தங்கள் கேட்பவருக்குப் பயனளிக்கின்றன. ஆனால் பகவானுடைய திருநாமத்தில் இதைக் காட்டிலும் வியக்கத்தக்க சக்தியிருக்கிறது. எத்தகையவனும், எத்தகைய எண்ணத்

னுடன் திருநாமத்தைக் கூறினாலும், அவனுக்கு மங்களம் ஏற்படுகிறது.

*'பாய் குபாய் அனக ஆலஸஹு்ம்] |*

*நாம ஜபத மங்கள திஸி தசஹு்ம்] ||*

*[மானஸம் 1/28/1]*

பகவந் நாமத்தை ஏச்சாகவோ, கொச்சையாகவோ, கேலியாகவோ எந்த முறையில் கீர்த்தனம் செய்தாலும், அது பாவத்தை நசிக்கச் செய்துவிடும்.

*'ஸாங்கேத்யம் பாரிஹாஸ்யம் வா*

*ஸ்தோபம் ஹேலனமேவ வா ।*

*வைகுண்டநாமக்ரஹணம்*

*அசேஷாகஹரம் விது: ||*

*[ஸ்ரீமத் பாகவதம் 6/2/14]*

"ஒருவன் ச்ரத்தையுடனோ, ஏச்சாகவோ என்னுடைய திருநாமத்தைக் கூறினாலும், அவனுடைய பெயர் எப்பொழுதும் என் ஹ்ருதயத்திலிருக்கிறது" என்று பகவான் தானே தன் நாம விஷயமாகக் கூறியிருக்கிறார்.

**சிரத்தயா ஹேலயா நாம*
*ரடந்தி மம ஜந்தவ: ।*
*தேஷாம் நாம ஸதா பார்த்த*
*வர்த்ததே ஹ்ருதயே மம ॥*

[மேல்வரும் பகுதியில் நாம மஹிமையில் ஏற்படும் ஐயப்பாடுகளுக்குத் தகுந்த விளக்கம் தரப்படுகிறது.]

சந்தேகம்:- வெல்லம் என்று சொன்னதும் வாயில் தித்திப்புத் தெரிவதில்லையே. அதுபோல பகவானுடைய திருநாமத்தை மட்டும் உச்சரிப்பதால் என்ன பயன்?

விளக்கம்:- வெல்லமென்ற சொல்லில் வெல்லமென்ற பொருள் இருப்பதில்லை வெல்லத்தை நாக்கில் இட்டவுடன்தான் தித்திப்புத் தெரிகிறது. தனவந்தனுடைய பெயரைக் கூறுவதால் பொருள்

டைப்பதில்லை. தனவந்தனுடைய பெயரில் தனமிருப்பதில்லை. ஆனால் கவந் நாமத்தில் பகவான் இருக்கிறார். ாமியான பகவானைக்காட்டிலும் நாமம் அவரது பெயர்] தனிப்பட்டதில்லை. ாமியினிடத்தில் நாமமிருக்கிறது. அவ்வாறே நாமத்தின் இடத்தில் ாமியிருக்கிறார். ஆதலால் பகவானுடைய ிருநாமத்தை உரைப்பதால் பகவான் ரகடனம் ஆகிறார்.

சந்தேகம்:- திருநாமம் என்பது வெறும் சொல்தானே? அதன் மூலம் என்ன பயன் கிட்டும்?

விளக்கம்:- வெறும் சொல்லுக்கே அளவற்ற சக்தி உள்ளது. ஆனால் பகவந் ாமத்திற்கு நாமத்தை சொல்பவனை கவானுடன் ஸம்பந்தம் ஏற்படுத்தும் ிறப்பான சக்தி உள்ளது. ஆகையால்

எவ்விதமாக உச்சரித்தபொழுதிலும் பகவந் நாமம் மங்களத்தைச் செய்கிறது. நாமத்தை ஜபிப்பவன் பக்தி ச்ரத்தையுடன் ஜபிப்பானாகில் விரைவில் பலனைத் தருகிறது.

*"ஸாதர ஸுமிரன ஜே நர கரஹீ[ம்] |*
*பவ வாரிதி கோபத இவ தரஹீ[ம்] ||"*

*[மானஸம் 1/119/2*

ஆதரவுடன் எவன் திருநாமத்தை நினைக்கிறானோ, அவன் பிறப்பிறப்பாகிய பெருங்கடலை, பசுவின் குளம்படி நீரைத் தாண்டுவதுபோல எளிதில் கடக்கிறான்.

நாம ஜபத்தில் ச்ரத்தை குறைவாக இருந்தபொழுதிலும் ஜபத்திலிருந்து பலன் அவசியமுண்டாகும். ஆனால் எப்போது உண்டாகுமென்ற நிச்சயம் இல்லை. ச்ரத்தையுடனேயே செய்யப்படும் நாம ஜபத்தின் எண்ணிக்கை அதிகரிக்கின்ற

போது நாம ஸித்தி ஏற்படும். நாம ஜபம் செய்கின்றவருடைய மனதில் சூக்ஷ்மமான பாவம் இருக்கிறது. அது நாம ஜபம் அதிகரிக்க, அதிகரிக்க ப்ரகடனமாகும்.

நாம ஜபம் ஓர் க்ரியையல்ல; அது ஓர் உபாஸனை. ஏனெனில் நாம ஜபத்தில் ஜபிப்பவருடைய லக்ஷியம் பகவானைக் குறித்து இருக்கிறது. எவ்வாறு பல யோகத்துடன் செய்யப்படும் கர்மா அஷ்டமாகாதபடி பலனைக் கொடுத்து விட்டு நாசமடையும் ஸாதாரண கர்மாவைப் போலில்லாமல் உத்தமமான பலனைக் கொடுக்கிறதோ, அவ்விதமே பகவானையே லக்ஷியமாக கொண்டு செய்யப்படும் நாம ஜபமே பகவத் ஸாக்ஷாத்காரத்தை அளிக்கவல்லது. பகவானையே லக்ஷியமாகக் கொண்டு இருப்பதால் நாமம் சின்மயமாக ஆகிறது. அதில் க்ரியையேதும் இல்லை.

அது மட்டிலுமல்ல, அந்த சின்மயத் தன்மையானது ஜபிப்பவரிடத்திலும் ப்ரகடனமாகிறது. அதாவது நாம ஜபம் செய்பவரது சரீரம்கூட சின்மயமாகிறது. அவரது சரீரத்தின் ஜடத்தன்மையும் அழிந்துவிடுகிறது. துகாராம் ஸ்வாமிகள் சரீரத்துடன் வைகுண்டம் சென்றது இதற்குச் சான்று. மீராவின் சரீரம் கிருஷ்ண விக்ரஹத்தில் கலந்துவிட்டது. கபீருடைய சரீரம் மறைந்து அவ்விடத்தில் பூக்குவியல் காணக் கிடைத்தது. சோகாமேலருடைய எலும்புகளில் இருந்து விட்டலநாமமானது கேட்கப்பட்டது.

**கேள்வி:- சாஸ்த்ரங்களும், ஸாதுக் களும் கூறுகின்ற பகவந் நாம மஹிமை எவ்வளவு தூரம் உண்மையானது?**

**பதில்:-** சாஸ்த்ரங்களும், ஸாதுக்களும் கூறும் நாம மஹிமை முழுவதுமே

உண்மையானது. அதுமட்டுமல்ல, நாளது வரை அவர்களும் நாம மஹிமையை முழுமையாகக் கூறிவிடவில்லை. ஏனெனில் பகவந் நாம மஹிமை அளவிலடங்காதது. பகவான் அனந்தன் [முடிவற்றவன்]. ஆதலால் அவனுடைய நாம மஹிமையும் அனந்தம் [அளவற்றது]- *'ஹரி அனந்த ஹரி கதா அனந்தா' [மானஸம் 1/140/3]* நாமத்தினுடைய மஹிமை முழுவதும் சொல்வதற்கு திருமாலே திறமையற்றவர் - *'ராமு ந ஸகஹி[ம்] நாம குண காயீ' [மானஸம் 1/26/4].*

கேள்வி:- நாமத்தினுடைய மஹிமைகளாகக் கூறப்பட்டவைகள் நாம ஜபம் செய்பவர்களிடத்தில் காணப் படுவதில்லையே. இதன் காரணமென்ன?

பதில்:- நாம மஹிமையை ஏற்றுக் கொள்ளாததால் நாம அபசாரம் ஏற்படுகிறது. ஆதலால் அத்தகைய அபசாரத்துடன் செய்யப்படும் நாம ஜபம் விரைவில் ஸித்திப்பதில்லை.

நாம ஜபத்தில் மனம் ஈடுபடாததாலும், த்யானத்துடன் நாம ஜபம் செய்யாத தாலும், நாமத்தின் மஹிமையை உளமார ஏற்காததாலும், உண்டான தோஷம் காரணமாக நாமத்தின் மஹிமை, நாம ஜபம் செய்பவர்களிடத்தில் எளிதில் காணக்கிடைப்பதில்லை. ஆனால் எவ்வித மாவது வாயால் நாம ஜபம் செய்து கொண்டிருந்தால் பயன் ஏற்படவே செய்யும். மேலும் நாம ஜபத்தின் விசேஷங்கள் யாதெனில் மனமானது ஈடுபட்டாலும், ஈடுபடாது போனாலும் நாம ஜபம் நிரந்தரமாகச் செய்யப் படுமாகில், நாமத்தின் க்ருபையால்

மனோலயம் தானாகவே ஏற்பட்டு, நாமத்தில் ச்ரத்தை, விச்வாஸம் முதலியவைகள் ஏற்பட்டுவிடும்.

வேறு விஷயங்களை மறந்து முழு ஈடுபாட்டுடன் [அனன்ய பாவத்துடன்], இடைவிடாமல் ஜபம் செய்து கொண்டு இருந்தால் உண்மையான லாபம் கட்டாயம் கிடைக்கும். ஏனெனில் பகவந் நாமம் என்பது உலகிலுள்ள ஜடப் பொருள்களின் பெயர் போன்றதல்ல. பகவான் சின்மயன். அவன் நாமமும் அத்தகையதே. ராஜஸ்தானில் புதாராம்ஜீ எனும் ஒரு ஸாது இருந்தார். அவர் சிறிது நேரத்தையும் வீணாக்காமல், நாம ஜப ஸாதனை செய்து வந்தார். சமையல் தயார் ஆனதும் தாயார் அவரை சாப்பிடக் கூப்பிடுவார். அவர் சாப்பிட்ட உடனே நாம ஜபத்தில் ஈடுபடுவார். ஒருநாள் அவர் தன் தாயாரிடம், "அம்மா! ரொட்டி

சாப்பிடுவதில் வெகுநேரம் செலவாகிறது. நாம ஜபத்தின் நேரம் குறைகிறது. ஆகையால் உப்புமா தயாரித்து தட்டிலிட்டு, அது சிறிது ஆறிய பிறகு கூப்பிடுங்கள்" என்று கூறினார். தாயார் அவ்விதமே செய்தார். சில தினங்களுக்குப் பின் அவர் உப்புமா சாப்பிடுவதிலும் நேரம் அதிகம் செலவாகிறது என்று உணர்ந்து கஞ்சி மட்டும் தயாரித்து ஆறியபிறகு கூப்பிட்டால் உணவருந்த வருவதாகத் தன் தாயாரிடம் கூற அவரும் அவ்விதமே செய்தார். இத்தகைய ஈடுபாட்டுடன் நாம ஜபம் செய்வானே யாகில், அவனுக்கு உண்மையான ஸித்தி ஏற்படும்.

சந்தேகம்:- ச்ரத்தா – விச்வாஸத்து டன் [ஆர்வம் – உறுதியான நம்பிக்கை] செய்யப்படும் நாம ஜபத்தால்தான் பலன் ஏற்படும் என்றால் மஹிமை நாமத்திற்கு

இல்லையென்று ஆகி விடுகிறதே? ரத்தைக்கும், விச்வாஸத்திற்குமே பெருமை கூறுவதாக ஆகிவிடுமன்றோ?

**விளக்கம்:-** ஒரு அரசனை அரசனாக அறியாதபோது, அரசனிடமிருந்து அடையக்கூடிய பயன் எதுவும் கிட்டாது. பண்டிதனைப் பண்டிதனாக அறியாத போது, பண்டிதனிடமிருந்து பெறத்தக்க பயனைப் பெறமுடியாது. மஹாத்மாக்களை மஹாத்மாக்களாக அறியாதபோது, மஹாத்மாக்களால் அடையக் கூடிய லாபத்தை அடையமுடியாது. பகவான் அவதரித்திருக்கும்போது கூட, அவனை பகவான் என்று அறியாமல் நெருங்கிப் பழகினாலும் பூர்ணபலனைப் பெற முடியாது. அரசனை, அரசன் என்று அறியாமல் பார்த்தாலும், அரசனது பெருமை சிறிதும் குறையப்போவதில்லை. ஆனால் பார்ப்பவனது லாபத்திற்கே

குறைவு வருகிறது. அவ்விதம் நாமத்தில் ச்ரத்தா-விச்வாஸம் இல்லாவிட்டால், அத்தகையவனுக்கு நாமத்தால் ஏற்படக் கூடிய லாபம் தடைப்படும். ஆனால் இதனால் நாம மஹிமைக்கு எந்த குறையும் வருவதில்லை. நம்பிக்கை இல்லாத வனுக்கே குறைவு ஏற்படுகிறது.

நாமத்தில் அளவற்ற சக்தி இருக்கிறது. அந்த சக்தி நாமத்தில் ச்ரத்தை-விச்வாஸம் கொள்வதால் அதிகமாகிறது; ச்ரத்தை-விச்வாஸம் குறைந்தால், சக்தி குறைகிறது என்ற பேச்சுக்கே இடமில்லை. எவன் நாமத்தில் விச்வாஸம் கொள் கிறானோ, அவனே நாமத்திலிருந்து லாபத்தைப் பெறுகிறான். மற்றவன் பெறுவ தில்லை. நாமத்தில் ச்ரத்தை-விச்வாஸம் கொள்ளாதவன் நாமத்திற்கு அபராதம் செய்தவனாகிறான். அந்த அபராதம்

காரணமாக, அவன் நாமத்தினால் ஏற்படும் லாபத்தைப் பெறமுடிவதில்லை.

கேள்வி:- ச்ரத்தை - விச்வாஸம் இல்லாமலேயே நெருப்பைத் தொட்டாலும் கை சுடுகிறது. ச்ரத்தை-விச்வாஸம் இல்லாமல் நாமத்தை உச்சரிப்பதால் நாம மஹிமை ப்ரகடனமாகாது என்பது எப்படிப் பொருந்தும்?

பதில்:- நெருப்பு ஓர் பௌதிகப் பொருள். அது பௌதிகப் பொருட்களையே எரிக்கிறது. ஆனால் பகவந் நாமம் அற்புதமானது; திவ்யமானது; உலக வஸ்துக்களிலிருந்து வேறுபட்டது. நாம ஜபம் செய்பவன் எவ்விதமான கருத்துடன் நாமத்தை ஏற்கிறானோ, அவன் விஷயத்தில் அவ்விதமாகவே நாமம் தனது மஹிமையை வெளிப்படுத்துகிறது. அவனுக்கு நாம மஹிமை அனுபூதியை

அளிக்கிறது. நாமத்தில் உள்ள விசித்திர தன்மை, லௌகிக நிலைக்கு அப்பாற்பட்ட தன்மை முதலியவற்றைத் தெரிவிக்கிறது நாமத்தில் ஓர் விசித்திரத்தன்மை உள்ளது அதாவது நம்பிக்கை, ச்ரத்தை இல்லாமல் நாமத்தை உச்சரிப்பவனின் விஷயத்திலும் நாமத்தின் சக்தி பிரகடனமாகத்தான் செய்கிறது. ஆனால் சிறிது தாமதமாகும் அவ்வளவுதான்.



**கேள்வி:- ஒரே ஒரு தடவை நாமப் சொல்வதால் எல்லா பாவங்களுப் போய்விடுகிறதா?**

**பதில்:-** மிகுந்த ஆர்த்தியுடன் [தாளாத மனத்துயரத்துடன்] சொல்லக் கூடிய ஒரே நாமத்தினாலேயே பாவங்கள் அனைத்துப் நசித்துவிடும். மனிதனுக்கு அந்திப சமயத்தில் மரணத்திலிருந்து காப்பாற்று பவர்கள் யாரும் இல்லை. அந்த கடைசித்

தருணத்தில் அவன் வாக்கிலிருந்து ஆர்த்தியுடன் சொல்லக் கூடிய ஒரே நாமம், அந்த மனிதனது ஸமஸ்த பாவங்களையும் போக்கிவிடுகிறது.

கஜேந்திரன், முதலையால் நீரினுள் பற்றி இழுக்கப்படும்போது, அவன் ஆர்த்தியுடன் ஒரே முறை பகவந் நாமத்தைச் சொன்ன உடனே பகவான் வந்து முதலையை அடித்து ·கஜேந்திரனை காப்பாற்றிய சரிதத்தை நினைவுகூர்வது, பொருத்தமாகும்.

வேறு ஸாதனைகளைப் பற்றாமல், தீவிரமான ச்ரத்தை - விச்வாஸத்துடன் ஒரே தடவைச் செய்யும் நாம கீர்த்தனத்தால் மங்களம் ஏற்படும்.

கேள்வி:- ஒரே நாமத்தால் மங்களம் ஏற்படும் எனின், நாமங்களைத் திரும்ப, திரும்பச் சொல்வது எதற்கு?

**பதில்**:- திரும்ப, திரும்ப நாமகீர்த்தன செய்து வந்தால்தான் ஆர்த்தியுடன் நா கீர்த்தனம் செய்யும் நிலைமை வரு பகவந் நாமத்தைப் பல தடவைக சொல்லிவரும் போது, ஒரு தடவை அந் ஆர்த்தியுடன் கூறக்கூடிய நிலை ஏற்பட் அவ்விதம் கூறியதும் நாம ப்ரபாவ ப்ரகடனமாகும். பழுதடைந்த எஞ்ஜினை பலமுறை இயக்கி ஸ்டார்ட் செய்வ போலத்தான் இதுவும். நான்கைந் தடவைகளில் எஞ்ஜின் வேலை செய்யலாம். மேலும் பல தடவைக ஸ்டார்ட் செய்ய வேண்டியிருக்கலா ஆகவே பலமுறை நாம ஜபம் செய் வேண்டியது அவசியம்.

**கேள்வி**:- நாம ஜபம் செய்பவே தீயசெயல்களையும் செய்கிறானே அவன் திருந்துவானா, திருந் மாட்டானா?

பதில்:- தக்க தருணம் வரும்போது அவன் அவசியம் கரையேறுவான். எந்தவிதத்தில் கூறியபோதிலும் பகவந் நாமம் வீணாகாது. ஆனால் தீய ஒழுக்கமுள்ளவன் நாம ப்ரபாவத்தின் முழுமையை உடனே உணரமுடியாது. இதற்கு மேல் மற்றொரு உண்மை யாதெனில், பகவானை அடைந்தே ஆக வேண்டும் என்ற லக்ஷியமில்லாதவனே பாவ காரியங்களைச் செய்கிறான். பரமாத்மாவை அடைய வேண்டும் என்ற குறிக்கோள் உள்ளவன் மூலமாக பாவகர்மங்கள் ஸம்பவிக்கும் என்ற பேச்சிற்கே இடமில்லை. பணத்தை குறிக்கோளாகக் கொண்டவன் தனது எந்த செயலும் பொருளீட்டுவதற்குத் தடையாக இருக்க அனுமதிக்க மாட்டான். எப்போதாவது, ஏதாவதொரு காரணத்தால் பணம் நஷ்டமானால் மிகுந்த துயரத்துடன் மூர்ச்சையாகி விடுவான். அவ்விதமாகவே பரமாத்மாவை

அடைவதையே குறிக்கோளாகக
கொண்டவன், அதற்குத் தடையாகும் எந்த
ஒரு செயலையும் செய்யமாட்டான். நாம
ஜபம் செய்யும் ஒருவன் தீய செயல்கள்
செய்தால் அவனுக்கு பகவானை
அடையவேண்டும் என்ற உறுதியான
லக்ஷியம் ஏற்படவில்லை என்று
தீர்மானிக்கலாம்.

ஸாதகன் பகவானை அடைவதையே
உறுதியான குறிக்கோளாகக் கொள்ள
வேண்டும். நாம ஜபத்தைச் செய்து
வரவேண்டும். இவ்வாறு இருப்பின்
அவனிடம் பாவகர்மங்கள் ஸம்பவிக்காது
எப்போதாவது பாவத்தைச் செய்யும்படி
நேர்ந்தால், மிகவும் பச்சாதாபம் ஏற்படும்
அதனால் அவன் மறுமுறை அவ்வித
ஒருபோதும் செய்யத் துணிய மாட்டான்.

கேள்வி:- எவனுக்கு பாவ
மிகுதியாக இருக்கிறதோ, அவன் பகவந்

நாமத்தைக் கூறமுடியாமல் ஆகி விடுகிறது. அவன் பகவந் நாமத்திற்கு எவ்விதம் தகுதி பெறுகிறான்?

பதில்:- உண்மைதான்.

*"வைஷ்ணவே பகவத்பக்தௌ*
*ப்ரஸாதே ஹரிநாம்னி ச ।*
*அல்பபுண்யவதாம் ஶ்ரத்தா*
*யதாவன்னைவ ஜாயதே ॥*

"எவனுக்கு புண்ணியம் குறைவாக விருக்கிறதோ, அவனுக்கு பக்தர் களிடத்திலும், பக்தியிலும், பகவத் ப்ரஸாதத்திலும், பகவந் நாமத்திலும் ச்ரத்தை ஏற்படுவதில்லை."

பித்தம் அதிகரித்த நோயாளிக்குக் கல்கண்டு கூடக் கசப்பாகவிருக்கும். ஆனால் அதைத் தொடர்ந்து சாப்பிட்டு வந்தால் பித்தம் குறைந்து, இனிக்கத் துவங்கும். அவ்விதமே பாவம் அதிகமாக இருப்பதால் நாமம் சொல்லமுடியாமல் தடை ஏற்படும். ஆனால் நாம ஜபம்

செய்வதை எப்படியாவது துவங்க
விட்டால், உடனே பாவம் அழிந்து பகவ
நாமத்தில் ருசியும், இனிமையும் ஏற்பட்டு
நாம ஜபத்தின் பயனையும் கண்கூடா
அறிய இயலும்.

**கேள்வி:- பாக்யம் செய்தவனி வாயிலிருந்தே பகவந் நாமம் கிளம்பு என்பது உண்மையானால், பாக்ய விதிக்கப்படாதவன் எவ்விதம் நாம ஜபிப்பான்?**

**பதில்:-** இந்த இடத்தில் பகவந் நாம
என்பதை **பாக்யமாகக்** [பேறாக] கரு
இடமில்லை. ஒரு செயலின் – கர்மத்தி
பின்விளைவே **பாக்யம்** அல்லது பேறு
ஒன்று செய்யப்படுகிறது; மற்றொன்
பின்னால் நிகழ்கிறது. அதாவது **பாக்ய**
என்பது பூர்வ கர்மங்களுடைய பலனா
நேர்கிறது புதிய கர்மங்களே செய்யப்ப
கின்றன அவைகள் தானாக ஏற்படுபவை

களல்ல. உதாரணமாக:- வியாபாரம்
என்பது செயல். லாபம் - நஷ்டம்
பின்விளைவு. பயணம் - செயல்.
ஓரிடத்தைச் சேர்வது - பயன். மருந்து
சாப்பிடுவது - இது செயல். உடல்
பலமடைவது - இது பயன். லாபம்-நஷ்டம்,
வாழ்க்கை-மரணம், புகழ்-பழி, இவை
யாவும் ஒரு செயலின் பின்விளைவுகளாக
அனுபவிக்கக் கூடியவைகள். ஏனெனில்
பூர்வஜன்மத்தில் செய்யப்பட்ட கர்மாக்
களுடைய பலன்களாகவே இவையாவும்
அமைகின்றன*. நாமஜபம் செய்வதென்பது
புதியதாகத் துவக்கப்பட்ட செயல் [கர்மா].

---

* *ஸுனஹு பரத பாவி ப்ரபல*
*பிலகி கஹேஉ முனிநாத* |
*ஹானி லாபு ஜீவனு மரனு*
*ஜஸு அபஜஸு விதி ஹாத* ||
*[மானஸம் 2/171]*

*வஸிஷ்டர் கூறுகிறார்: பரதனே! கேள். விதி வலிமை வாய்ந்தது. லாபம்-நஷ்டம், வாழ்க்கை-மரணம், புகழ்-பழி இவையனைத்தும் இறைவனுக்கு வயப்பட்டவை.*

இது செயலின்பால்படும். ஆகவே நாம ஜபத்தையோ, அதில் ஆர்வத்தையோ செயலின் விளைவாகக் [பாக்யமாக] கருதக்கூடாது. முற்பிறவிகளில் ஜபம் செய்யப்பட்டிருந்தால், நாமத்தின் மஹிமையைக் கேட்ட கணத்திலிருந்தே நாம ஜபத்தில் சுவை ஏற்பட்டுவிடும். ஆனால் முற்பிறவிகளில் நாம ஜபம் செய்திராதவன், நாம மஹிமையைக் கேட்டமாத்திரத்தில் அதில் ருசியை அடைவதில்லை. மேலும் அனுபூதி அடைந்தவன் நாம மஹிமையைக் கூறினால், கேட்பவனுக்கும் நாமத்தில் ருசி உண்டாகிறது. மேலும் அத்தகைய அனுபவசாலியின் ஸங்கத்தில் இருப்பவர் களுக்கும் நாம ஜபம் செய்வது ஸுலபமாக ஆகிறது. ஒருவனுக்கு பூர்வபுண்ய பலனாக கிடைக்கிறது. புதிய கர்மா இல்லை. நாம ஜபம் செய்வதை இப்பிறவியில் ஆரம்பிப் பானாகில், அது புதிய கர்மாவாகவும், புதிய உபாஸனமாகவும் இருக்கிறது.

நாம ஜபம், ஸத்ஸங்கம் முதலானவற்றுக்கு நாம் கொடுத்து வைக்கவில்லை என்று கூறுவது நாம ஜப ஸாதனையைத் தட்டிக் கழிப்பதற்கான வழியே. இத்தகைய தவறான எண்ணமே துஷ்டஸங்கமாகி, நாம ஜபம் செய்யும் முயற்சியை நசுக்கிவிடுகிறது.

**சந்தேகம்:- நாம ஜபம் ப்ராரப்த கர்மத்தை [முன்வினையை] மாற்றி அமைக்குமா?**

**விளக்கம்:-** ஆம், பகவந் நாம ஜபத்தினாலும், கீர்த்தனத்தினாலும் ப்ராரப்தம் [முற்பிறவியில் செய்த கர்மாக்களின் பயன்] மாறுபாடு அடைகிறது. புதிய ப்ராரப்தம் ஏற்படுகிறது. அடையாததெல்லாம் அடையப்படுகிறது. நடக்காததெல்லாம் நடக்கிறது. இது ஸாதுக்களுடைய அனுபவம். கர்ம பலன்களைக் கொடுக்கின்ற பரமாத்மா

வினுடைய திருநாமங்களைக் கீர்த்தனம் செய்கின்றவனுடைய முன்வினை மாறுவதில் ஆச்சரியம் ஏதுமில்லை. பிச்சை எடுத்துக்கொண்டு, வயிறு நிரம்ப உணவும் கிடைக்காதபடி அலையும் ஒருவன், தூய உள்ளத்துடன் நாமஜபத்தில் ஈடுபடுவானாகில், அவனுக்கு போதுமான உணவு, உடை இவையாவும் கிடைக்கும் அவனுக்கு எந்தக் குறைவும் ஏற்படாது ஆனால் நாம ஜபத்தை ப்ராரப்தத்தை மாற்றுவதற்காகவோ, பாவங்களை அழிப்பதற்காகவோ பயன்படுத்தக் கூடாது விலையுயர்ந்த ரத்னத்தைக் கொடுத்துக் கரியை வாங்குபவன் எவ்விதம் புத்திசாலியாக மாட்டானோ, அவ்வாறு விலையுயர்ந்த பகவந் நாமத்தை அல்ப விஷயங்களுக்காக உச்சரிப்பது அறிவுடைமையாகாது.

கேள்வி:- நாம கீர்த்தனத்தால் மட்டுமே அனைத்து பாவங்களும் விலகுமேயாகில், சாஸ்திரங்களில் பாவ ப்ராயசித்தமாக பல விதிகள் இருப்பதின் காரணமென்ன?

பதில்:- நாம ஜபத்தினால் அறிந்தும் அறியாமலும் செய்யப்பட்ட அனைத்துப் பாவங்களும் பரிகாரம் செய்யப்பட்டதாகின்றன; நசித்து விடுகின்றன. ஆனால் பகவந்நாமத்தில் ச்ரத்தையும், விச்வாஸமும் எளிதில் ஏற்படாததால், சாஸ்திரங்களில் பலவிதமான ப்ராயச்சித்தங்கள் கூறப் பட்டுள்ளன. நாமத்தில் ச்ரத்தையும், விச்வாஸமும் உண்டானதும் வேறு ப்ராயச்சித்தம் செய்ய அவசியமில்லை. நாம ஜபம் செய்கின்ற பக்தனிடத்தில் ஏதாவது பாவமோ, தவறுதலோ ஏற்படின், அதை விலக்குவதற்காக மற்றொரு ப்ராயசித்தத்தைச் செய்யவேண்டிய அவசியமில்லை. உறுதியுடன் செய்யப்

படுகின்ற நாம ஜபமே, எல்லாப் பாவங்களையும் விலக்கி, ச்ரேயஸை அடைவிக்கிறது.

**கேள்வி:- வேண்டுதலுடன், விருப்பங்கள் நிறைவேறுவதற்காக நாம ஜபம் செய்தால், அந்த நாம ஜபம் பலனைக் கொடுத்துவிட்டு அழிந்துவிடுமா?**

பதில்:- உலகிலுள்ள நிகழத்தக்க விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளவே நாமத்தை செலவழிப்பது புத்திசாலித் தனமல்ல. ஆனால் நாமகீர்த்தனம் காமிய புத்தியுடன் செய்யப்படுமேயாகிலும், நாம மஹிமை அழிவதில்லை. அவ்வாறு செய்பவனுக்கும் பாரமார்த்திகமான லாபம் அவசியம் ஏற்படுகிறது. ஏனெனில் நாமத்திற்கு பகவானுடன்கூட நேரிடையான தொடர்புள்ளது. விருப்பங்களை நிறைவேற்றிக் கொள்ளமட்டும் நாம

கீர்த்தனம் செய்தால், பாரமார்த்திக லாபம் குறைகிறது. பகவானே குறியாக நாம கீர்த்தனத்தில் ஈடுபடுவானாகில், நாமத்தின் க்ருபையால் அந்த காமிய வாசனை அழிந்து விடுகிறது. துருவ ஸ்வாமி உயர்ந்த பதத்தை விரும்பி நாம ஜபத்தை ஆரம்பித்தார். ஆனால் அவருக்கு பகவத் தர்ஸனம் ஏற்பட்டபின், ராஜ்யம், பதவி முதலியவைகள் கிடைத்தபோதும் திருப்தி ஏற்படவில்லை. உலகியல் இச்சைகளுக்காக எம்பெருமானை ப்ரார்த்திக்க நேர்ந்ததைக் குறித்து துக்கப்பட்டார். இதிலிருந்து அவரது ஸகாமபாவனை திருநாம கீர்த்தனத்தால் அழிந்துவிட்டது என்று தெரிகிறது.

பலனை விரும்பி நாமகீர்த்தனம் செய்பவனுக்கும், பகவந் நாமத்தின் க்ருபையால் அந்திம காலத்தில் ஈச்வர

நாமஸ்மரணம் ஏற்பட்டு மங்களம் ஏற்படுகிறது.

கேள்வி:- இவ்வளவு [எண்ணிக்கை] நாம ஜபம் செய்தால், பகவானுடைய ஸாக்ஷாத்காரம் ஏற்படுகிறது என்று சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ளது உண்மையா?

பதில்:- ஆம்.

*'ஹரே ராம ஹரே ராம*
*ராம ராம ஹரே ஹரே* |
*ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண*
*க்ருஷ்ண க்ருஷ்ண ஹரே ஹரே* ||

என்ற மந்த்ரத்தை மூன்றரைக் கோடி முறை ஜபித்தால் பகவத் தர்ஸனம் ஏற்படும் என்று "கலிஸந்தரணோபநிஷ' த்தில் கூறப்பட்டுள்ளது. பதிமூன்றுகோடி "ராம" நாமத்தை ஜபிப்பதால் பகவத் தர்ஸனம் ஏற்படும் என்று ஸமர்த்தராம

தாஸரால் "தாஸபோத"த்தில் கூறப்பட்டு உள்ளது* ஆனால் நாமத்திலும், பகவானிடத்திலும் ச்ரத்தை, விச்வாஸம், ப்ரேமை இவை அதிகரிக்கும்போது மேற்கூறிய எண்ணிக்கை முடியும் முன்பேயே பகவத் ஸாக்ஷாத்காரம் [தர்ஸனம்] ஏற்பட்டு விடுகிறது.

கேள்வி:-

*"நஹிம் கலி கரம ந பகதி விவேகூ ।*
*ராம நாம அவலம்பன ஏகூ ॥*

*[மானஸம் 1/27/4]*

கலியில் கர்மா, பக்தி, ஞானம் இவைகள் பகவானை அடைய ஸாதனமாகாது. ராம நாமம் ஒன்றே ஸாதனமாகும். இவ்வாறு கூறப்பட்டதின் கருத்து யாது?

---

** "ஸ்ரீராம ஜயராம ஜய ஜய ராம" எனும் பதின்மூன்று எழுத்துக்களையுடைய "த்ரயோதசாக்ஷரீ" என்ற ராம மந்த்ரத்தை பதின்மூன்றுகோடி முறை ஜபித்தால் பகவான் காக்ஷி தருவதாக தாஸபோதத்தில் காண்கிறது.*

**பதில்:-** கலியுகத்தில் யாகம் முதலிய சுபகர்மாக்களை முறைப்படி நடத்துவது கடினம். அவைகளின் முறைகளை சரியாக அறிந்தவர்களும் மிகக் குறைவு. மேலும் தூய்மையான பசுநெய் கிடைப்பதும் அரிது. ஆதலால் கலியுகத்தில் முறைப்படி யாகம் முதலியவற்றை செய்யமுடியாததால் குறைபாட்டுடன் செய்யப்படும் கர்மாக் களிலிருந்து தோஷமே ஏற்படுகிறது.

கலியுகத்தில் விதிமுறையுடன் கூடிய பக்தி செய்வது கடினம். தற்காலத்தில் அந்தந்த தேவதைகளுக்குரிய பூஜை, ஆராதனை முறைகளைச் செவ்வனே அறிந்தவர்கள் குறைவாகவே உள்ளனர். ஆதலால் இத்தகைய பக்தியைச் செய்வதும் கலியுகத்தில் கடினமான காரியம். இத்தகைய குறைபாடுகளுடன் இவற்றை அனுஷ்டிப்பவனுக்கு பாவம் ஸம்பவிக்கும்.

ஞான மார்க்கமும் கடினமாக இருக்கிறது. இந்த மார்க்கத்தை உபதேசிக்கும் அனுபவசாலிகளான ஆசார்யர்கள் கிடைப்பது அரிது. ஆதலால் கலியுகத்தில் ஞானமார்க்கத்தில் செல்வதும் கடினம். கர்மம், ஞானம், பக்தி முதலிய மூன்று மார்க்கங்களும் கலியுகத்தில் மிகக் கடினமானவை. ஆனால் பகவந் நாமத்தை உச்சரிப்பது மிகவும் எளிது. பகவந் நாமத்தை அனைவரும் கூறலாம். இதில் எந்த விதியும் கிடையாது. சிறுவர், பெண், ஆண், முதியவர், இளைஞர், நோயற்றவர், நோயாளி முதலிய அனைவரும் கூறலாம். எந்த சமயத்திலும், எந்த சூழ்நிலையிலும், எத்தகைய நிலையிலும் திருநாம கீர்த்தனம் செய்யலாம்.

நாமம் என்பது பகவானை அழைப்பதாகும். இதில் மன ஈடுபாடு, ப்ரேமை மிக முக்கியம். விதிமுறைகளுக்கு

முக்கியத்துவம் இல்லை. ஆதலால் பகவந் நாமத்தைச் சொல்லிக் கொண்டு ஒவ்வொரு மனிதனும் உருக்கத்துடன் பகவானை அழைக்கமுடியும்.

சந்தேகம்:- மனம் ஈடுபடாமல் நாம ஜபம் செய்வதால் பயனில்லை. கபீர்தாஸ்

*'மாலா தோ கர மே[ம்] பிரே,*
*ஜீப பிரை முக மாஹி[ம்] |*
*மனுவா[ம்] தோ சஹு[ம்] திஸி பிரை,*
*யஹ்தோ ஸுமிரன் நாஹி[ம்] ||*

[கரத்திலோ மாலை, நாவில் நாமம், மனமோ நாற்திசைகளிலும் சுற்றுகிறது. இது நாம சிந்தனமாகாது.]
என்று கூறுகிறார் அன்றோ?

விளக்கம்:- மனம் ஈடுபடாதுபோனால் ஸ்மரணம் உண்டாகாது என்பது உண்மையே! ஆனால் இது நாம ஜபம் ஆகாது என்று மேற்கூறிய பாடலில்

சொல்லப்படவில்லை. நாம ஜபம் ஒருபோதும் வீணாகாது. ஆதலால் மனம் ஈடுபட்டாலும், ஈடுபடாவிட்டாலும் நாம ஜபம் செய்து கொண்டே இருக்க வேண்டும். எப்பொழுது மனம் ஈடுபடுமோ, அப்போது நாம ஜபம் செய்ய வேண்டுமெனில் நாம ஜபமே செய்ய முடியாது. ஆனால் நாம ஜபம் செய்ய ஆரம்பித்துவிட்டால், மனம் லயிக்க ஆரம்பித்துவிடும். மனதை பகவானிடத்தில் லயிக்கச் செய்வதே நாம ஜபத்தின் வளர்ச்சியாகும்.

கேள்வி:- சாஸ்த்ரங்களில், நாம கீர்த்தனத்தை விரும்பாதவர்களுக்கும், நாமத்தில் ச்ரத்தை இல்லாதவர்களுக்கும் நாம உபதேசம் செய்யக் கூடாது; அவ்வாறு செய்பவன் நாம அபராதியாவான் என்று கூறப்பட்டு உள்ளது. ஆனால் ஸ்ரீக்ருஷ்ணசைதன்ய

மஹாப்ரபு முதலானோர் நாமத்தில் நம்பிக்கை இல்லாதவர்களும் நாமத்தை கேட்கச் செய்தது ஏன்?

**பதில்:-** நாமத்தைக் கேட்கவோ, வாயினால் கூறவோ விரும்பாமல் வெறுப்பவனுக்கு நாம உபதேசம் செய்யக் கூடாதென்பது சாஸ்திர விதியாகும். ஆயினும் மஹாபுருஷர்கள் க்ருபையினால், அவர்களுக்கும் கூறுகிறார்கள். அவர்களுடைய கருணை, விதி-தடை இவற்றுக்கு அப்பாற்பட்டது. விதியோ, தடையோ ஸாதாரண கர்மங்களைக் கட்டுப்படுத்துமே தவிர, மஹான்கள் மனிதகுலத்திற்குக் காட்டுகிற பெருங் கருணையைக் கட்டுப்படுத்தா. அவர்களது கருணை காரணமின்றி ஏற்படக்கூடியது. பகவானை அறிந்த ஓர் மஹாபுருஷன் தனது சக்தியால் ஒருவனுக்கு ஏதாவதொன்றை அளிப்பாரேயாகில், அது

பெறுபவனுடைய பூர்வ கர்மாவின் பலனாக ஆகாது. அது அந்த மஹா புருஷனின் அவ்யாஜ கருணையினாலேயே ஏற்படக்கூடியது. இவ்விதமே கௌராங்க மஹாப்ரபு போன்ற ஸாதுக்கள் கருணைக்கு வசப்பட்டு துஷ்டர்கள், பாவிகள் இவர்களுக்கும் பகவந் நாமத்தைப் போதித்தனர்.

கேள்வி:- மரணத்தருவாயிலிருக்கும் மிருகங்களும், பறவைகளும் திரு நாமத்தைக் கேட்கச் செய்தால், அவை உய்யும் வழி உண்டா?

பதில்:- பசுபக்ஷி முதலியவை பகவந் நாமத்தின் ப்ரபாவத்தை அறிவதுமில்லை; அவற்றின் காதில் நாம சப்தம் விழுந்தால் அதைத் தடுப்பதுமில்லை. பசுபக்ஷிகள் நாமநிந்தை, திரஸ்காரம் இவைகளைச் செய்வதில்லை. ஆகவே மரணத்தருவாயில்

உள்ள பசுபக்ஷிகள் திருநாமத்தைக் கேட்டால், நாம ப்ரபாவத்தால் அவைகளும் உய்ய வழி பிறக்கும். அதாவது நாம மஹிமையினால் அவைகளுக்கு உதாரணம் ஏற்படும்.

**கேள்வி:- அந்திம காலத்தில் புத்ரர் களைக் கூப்பிடும் வியாஜத்திலாவது 'நாராயணா', 'வாசுதேவா' என்ற பெயர்களை ஒருவன் கூறினால், அவற்றை தனது திருநாமங்களாக அனைத்தும் அறிந்த எம்பெருமான் எவ்வாறு கருத இயலும்?**

பதில்:- பகவான் மிகுந்த கருணை உடையவர். அவர் ஒரு தனிப்பட்ட சலுகை அளித்திருக்கிறார். மனிதன் மரணத் தருவாயில் யாதொரு காரணத்தினாலோ பகவானின் நாமங்களைக் கூறினால் அல்லது அவற்றை நினைவுகூர்ந்தால்,

அவனுக்கு மேன்மை ஏற்படும் என்ற சலுகைதான் அது. காரணம் யாதெனில் பகவான் ஜீவகோடிகளுடைய க்ஷேமத்தின் பொருட்டு, அவர்களுக்கு மனித உடலைக் கொடுக்கிறார். ஜீவனும் அதைப் பெறுகிறான். அதனால் ஜீவனுக்கு நன்மை விளைந்தால் தான் எம்பெருமான் மனித உடலைக் கொடுத்ததும், ஜீவன் மனித உடல் பெற்றதும், பொருள் பெற்றதாகும். ஆனால் மனிதன் இந்த அரிய வாய்ப்பைப் பயன்படுத்திக் கொள்ளாமல், உடலைப் பிரிய நேரிடுகிறது. இந்த தருணத்திலாவது ஏதாவது ஒரு காரணத்தின் பொருட்டு தன் திருநாமத்தை அவன் உச்சரித்தால் அவனைக் காப்பாற்றிவிடலாம் என்று கருணையே வடிவான பகவான் கருதி மேலும் ஒரு வாய்ப்பை நல்குகிறார். மக்களைப் பெயர் கூறி அழைத்ததைத் தன்னையே விளித்ததாக ஆக்கி அந்த ஜீவனுக்கு நல்ல கதி கொடுக்கிறார்.

மரணத்தருவாயில் படுத்திருந்த அஜாமிளன் அச்சமூட்டும் வகையில் காக்ஷியளித்த யமதூதர்களைப் பார்த்துத் தன் மகன் நாராயணனைப் பெயர் கூறி அழைக்க, எம்பெருமான் அதைத் திருநாம கீர்த்தனமாகக் கருதி, தனது நான்கு பார்ஷதர்களையும் அஜாமிளனுக்கு அருகில் அனுப்பினான் அன்றோ!

மனிதனுக்கு இரவோ - பகலோ, சாப்பிடும்போதோ - குடிக்கும்போதோ, தூங்கும்போதோ - விழித்திருக்கும் போதோ, நடக்கும்போதோ - நிற்கும் போதோ, எந்த சமயத்திலும் பகவந் நாமத்தை கீர்த்தனம் செய்வதென்பது இயல்பாக ஆக வேண்டும்.

மனதை த்யானம் செய்யும் பொருளில் மீண்டும் மீண்டும் ஈடுபடுத்துவது அப்யாஸமாகும். நாம ஜபம் எல்லாக்

காலத்திலும் செய்யக்கூடியதாக இருப்ப தால், இந்த அப்யாஸத்தை ஒரு சமயம் செய்வது, ஒரு சமயம் செய்யாமலிருப்பது என்பது கூடாது. த்யானத்திற்குப் பொருளான பகவானிடத்தில் ப்ரேமை யுடன் எப்போதும் நாமத்தை அப்யாஸம் செய்ய வேண்டும். இந்தவித அப்யாஸத் தினால் அப்யாஸம் உறுதியடைகிறது.

அப்யாஸம் இருவகைப்படும். 1. நமது லக்ஷியம் அதாவது எது த்யானத்திற்கு பொருளோ, அதிலேயே மனதை நிறுத்தி, அது தவிர்ந்த மற்ற எண்ணங்களை, சித்தவ்ருத்திகளை பொருட்படுத்தாமல் விட்டுவிடுவது.

2. எங்கெல்லாம் மனம் அலைகிறதோ, அங்கெல்லாம் த்யானத்திற்கான பர வஸ்துவையே பார்ப்பது.

மேற்கூறிய இரண்டு உபாயங்களைத் தவிர மனதை ஈடுபடுத்த மேலும் பல உபாயங்கள் உள்ளன.

1. ஸாதகன் த்யானத்திற்கு அமரும் போது முதலில் 3-4 முறை சுவாஸத்தை வெளியேற்றி நான் மனதிலிருந்து ஸர்வ உலக விஷயங்களையும் வெளியேற்றி விட்டேன். என் மனதில் ஸம்ஸார விஷய எண்ணங்களே இப்போது இல்லை. என் மனதில் பகவத் சிந்தனமே இருக்கிறது. எண்ணத்தில் எது வந்தாலும் அவையாவும் பகவத் ஸ்வரூபமே. பகவானைத் தவிர என் மனதில் வேறு எந்த விஷயமும் வராது. என் மனதில் வருவதெல்லாம் பகவானுடைய ஸ்வரூபம். *'வாஸுதேவ: ஸர்வம்'* [வாஸுதேவனே எல்லாம்] என்பதே உறுதியான விஷயம் இவ்வாறு எண்ணும்போது மனம் பகவானிடத்திலேயே லயிக்கிறது.

2. நாம ஜபம் செய்யும்போது இரண்டு விஷயங்களைக் கவனிக்க வேண்டும். *'ரா...ம...ரா...ம'* என்று வெகு நிதானமாக ஜபம் செய்யும் போதே இடையிடையே நாம் செய்யும் ஜபத்தை நாமே கேட்க வேண்டும். ஒவ்வொரு நாமத்தையும் கேட்காமல் அடுத்த நாமத்தை ஜபிக்கக் கூடாது. இதுவும் மனோலயத்திற்கு ஓர் வழி.

3. எந்த நாமத்தை உச்சாரணம் செய்கிறோமோ, மனதாலேயே அந்த நாமத்தைக் கூற வேண்டும். அதை விரல்கள் அல்லது ஜபமாலை கொண்டு எண்ணாமல் மனதாலேயே எண்ண வேண்டும்.

4. ஒரு நாமத்தை வாக்கினால் உச்சரித்துக் கொண்டே, மனதினால்

மற்றொரு 'நாமத்தை ஜபிக்க வேண்டும். வாக்கினால் *'ராம ராம ராம'* என்று உச்சரிக்கும்போதே மனதினால் *'க்ருஷ்ண க்ருஷ்ண க்ருஷ்ண'* என்று ஜபிக்க வேண்டும். இதுவும் மனதிற்கு வேறு விஷயத்திற்கு செல்ல தடை செய்யும் உபாயம்.

5. வெளி உச்சாரணத்தில் ராகத்துடன் கீர்த்தனம் செய்வதுபோல், மனதாலேயே ராகத்துடன் கீர்த்தனம் செய்வதும் மனோலயத்திற்கு ஓர் வழி.

6. திருவடி முதல் திருமுடி வரை, அவ்வாறே திருமுடி முதல் திருவடி வரை எம்பெருமானின் திவ்ய மங்கள விக்ரஹத்தை மனதின் சிந்தனைக்கு விஷயமாக்கி, நாம ஜபம் செய்ய வேண்டும்.

7. என்னெதிரில் பகவான் நிற்கிறார் என்று எண்ணிக் கொண்டு பகவானின் திருவுருவை சிந்திக்க வேண்டும். பகவானுடைய வலது பாதத்தின் ஐந்து விரல்களிலும் மனதாலேயே ஐந்து நாமங்களை எழுதவேண்டும். விரல்களுக்கு மேலுள்ள புறங்கால் பகுதியில் நீளவாக்கில் மூன்று நாமங்களை எழுதவும். குதிகால் இடைவெளியில் இரு நாமங்களை எழுதவும். குதிக்காலுக்கு மேல் நீளவாக்கில் மூன்று நாமங்களை எழுதவும். அதன் மேற்பகுதியில் முழங்கால் பகுதியில் வட்டவடிவில் ஒவ்வொரு நாமம் எழுத வேண்டும். தொடைப்பகுதியில் நீளவாக்கில் மூன்று நாமங்கள் எழுத வேண்டும். வலதுபக்க இடுப்பில் இரண்டு நாமங்களில் ஒட்யாணம் அணிவிக்க வேண்டும். விலாப்புறத்தில் மூன்று நாமங்கள் எழுதவேண்டும். இரண்டு நாமங்களைத் தோளிலும், கைகளின்

ஆரம்ப பாகத்தில் [புஜ மூலத்தில்] மூன்று நாமங்களையும் எழுதவேண்டும். முழங்கையின் மேலும், கீழும் இரண்டு இரண்டு நாமங்களையும், மணிக்கட்டுக்கு மேல் பாகத்தில் மூன்று நாமங்களையும், மணிக்கட்டில் இரண்டு நாமங்களையும், ஐந்து கைவிரல்களிலும், ஐந்து நாமங்களையும் எழுதவேண்டும். கழுத்தில் நான்கு நாமங்களை [அரை] மாலையாகவும், காதில் இரண்டு நாமங்களைக் குண்டலமாகவும் எழுதவேண்டும். கிரீடத்தின் வலது [அரை] பக்கம் ஆறு நாமங்களையும், [கிரீடத்தின் கீழே இரண்டு நாமங்களையும், கிரீட மத்தியில் இரண்டு நாமங்களையும், மேல் பாகத்தில் இரண்டு நாமங்களையும்] மானஸிகமாக எழுத வேண்டும்.

இதன் கருத்தாவது பகவானுடைய வலப்புறத்தில் திருவடியிலிருந்து திருமுடி

வரை ஐம்பத்தி நான்கு நாமங்களையும், இடப்புறத்தில் திருமுடியிலிருந்து திருவடி வரை ஐம்பத்து நான்கு நாமங்களையும் மானஸிகமாக எழுதவேண்டும். இதனால் எம்பெருமானை வலப்புறமிருந்து, இடது புறமாக வலம் வந்ததாகிறது. மேலும் பகவானுடைய அவயவங்கள் அனைத்தையும், தனித்தனியே த்யானித்ததாக ஆகிறது. மேலும் நூற்றெட்டு நாமங்களை உச்சரித்ததாகவும் ஆகிறது. இவ்வாறு நூற்றெட்டு நாமங்களுக்கு ஒரு சுற்று மாலை தினமும் நாம ஜபம், ரூபத்யானம் செய்ய வேண்டும். கொஞ்சம் கொஞ்சமாக இந்த எண்ணிக்கையை அதிகப்படுத்த வேண்டும். இவ்விதமாக அப்யாஸம் செய்வதில் அனேக ரூபமும், முறைகளும் இருக்கின்றன. இம்முறைகளில் ஸாதகன் ஸ்வயமாகவே விருப்பப்படி த்யானம் செய்யலாம்.

மனம் லயிப்பதற்கு மேற்கூறிய முறைகளைப் போல வேறு முறைகளை யும் ஸாதகன் ஏற்படுத்திக் கொண்டு பயிற்சி செய்து பயன் பெறலாம்.

அப்யாஸத்திற்கு உதவியாக வைராக் யம் அவசியமாகிறது. ஸம்ஸார போகங் களிலிருந்து மனம் எந்த அளவு விடுபடுகிறதோ, அந்த அளவே பகவானிடத்திலும் ஈடுபடும். உலக ஆசைகள் அறவே அழிந்த பிறகு, மனதில் போகங்களைப் பற்றிய சிந்தனை எழாது. பழைய பழக்கத்தின் காரணமாக எப்பொழுதாவது, ஏதாவது உலக ஆசை தோன்றினாலும், அதை பொருட்படுத்தக் கூடாது. நாளடைவில் அவ்வித எண்ணங்கள் முழுவதும் அழிந்துவிடும். இவ்விதம் அப்யாஸத்தாலும், வைராக்யத் தாலும் மனவ்ருத்திகளைத் தடை செய்தால், மனம் வயப்பட்டுவிடுகிறது.

**வைராக்யம் பெற சில உபாயங்கள்:-**

1. ஸம்ஸாரம் ஒவ்வொரு நிமிடமும் மாறுபாட்டைக் கொண்டது. பரமாத்மாவின் அம்சமானஜீவன் ஒருபோதும் மாறுதலற்றது. நம்முடன் ஒருபோதும் ஸம்ஸாரம் இருப்பதில்லை. நாமும் , அதனுடன் இருப்பவரல்ல. இளமை, முதுமை முதலியன எவ்விதம் நம்முடன் இருப்பது இல்லையோ, அவ்விதமே ஸம்ஸாரமும். இவ்விதமாக விசாரம் செய்வதால் வைராக்யம் உண்டாகிறது.

2. நம்முடையது என்று கருதப்படும் நமது சுற்றத்தினர் நமக்கு அனுகூலமாக இருப்பின் நம்முடைய சக்தி, திறமை, அறிவு இவற்றிற்கேற்ப, அவர்களுடைய நியாயமான விருப்பங்களை நிறைவேற்றி முழு முயற்சியுடன் அவர்களுக்கு சேவை செய்ய வேண்டும். ஆனால் பிரதிபலனாக

அவர்கள் எப்பொழுதும் நமக்கு அனுகூலமாக இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கக் கூடாது. அவர்களிடமிருந்து ஏதாவது அடையவேண்டுமென்ற ஆசையும் ஒருபோதும் இருக்கக்கூடாது. இவ்விதம் தமது சக்திக்குத் தகுந்தபடி சேவை செய்து, அவர்களது தேவைகளை நிறைவேற்றுவதன் மூலம், அவர்களிடம் கொண்டுள்ள பழைய பற்று அழிகிறது. அவர்களிடத்திலிருந்து எதையும் எதிர் பார்க்காததால், புதிய ஆசை கிளம்பாது. இதனால் மனிதனது இயல்பான ஸம்ஸாரப் பற்று அழிந்து வைராக்யம் உண்டாகிறது.

3. மனிதனுக்குத் தோன்றும் குறைகள், தவறுகள், பாவங்கள், துயரம் இவையனைத்தும் அவனிடத்திலுள்ள உலகப் பற்றின் காரணமாகவே ஏற்படுகின்றன. எவ்வளவு தூரம் பற்று அறுகிறதோ

அவ்வளவு ஆனந்தமும், ஸுகமும், சாந்தியும். இதை நன்கு உணர்ந்து, விசாரம் செய்வதால் வைராக்யம் தோன்றுகிறது. வைராக்யத்துடன் செய்யப்படும் திருநாம கீர்த்தனம் அமர நிலையை அடைவிக்கும்.

## ஓம் தத் ஸத்

*'பாடீர்! அவன் நாமம், வீடே பெறலாமே '*

*- நம்மாழ்வார்.*

*தூமலர் தூவித் தொழுது வாயினால் பாடி,*
*மனத்தினால் சிந்திக்கப் போய பிழையும்*
*புகுதருவான் நின்றனவும்,*
*தீயினில் தூசாகும்.*

*- ஆண்டாள்*

*துஞ்சும் போதழைம்மின்! துயர் வரில் நினைம்மின்!*
*துயரிலீர் சொல்லினும் நன்றாம்.*
*நஞ்சுதான் கண்டீர் நம்முடை வினைக்கு*
*நாராயணா என்னும் நாமம்.*

*- திருமங்கையாழ்வார்.*

என்ற புத்தகத்திலிருந்து

உண்பதற்கு முன் தூய நீரால் கைகால்களைக் கழுவ வேண்டும். முகத்தையும் சுத்தம் செய்ய வேண்டும். பின் கிழக்கு அல்லது வடக்கு முகமாக, தூய்மையான இருக்கையில் அமர்ந்து உணவனைத்தையும் இறைவனுக்குக் கீழ்வரும் ச்லோகத்தைச் சொல்லி அர்ப்பிக்க வேண்டும்.

*'பத்ரம் புஷ்பம் பலம் தோயம்*
*யோ மே பக்த்யா ப்ரயச்சதி |*
*ததஹம் பக்த்யுபஹ்ருதம்*
*அச்நாமி ப்ரயதாத்மன: ||*

*[கீதை 9/26]*

பிறகு வலது கையில் ஜலம் எடுத்துக் கொண்டு

*'ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்மஹவிர்*
*ப்ரஹ்மாக்னௌ ப்ரஹ்மணா ஹுதம் |*
*ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம்*
*ப்ரஹ்மகர்மஸமாதினா ||*

*[கீதை 4/24]*

இந்த ச்லோகத்தை படித்து ஆசமனம் செய்து [நீரை உட்கொண்டு]

உணவின் முதல் பிடியை பகவானது திருநாமங்களைக் கூறிக் கொண்டு வாயிலிட வேண்டும். ஒவ்வொரு உருண்டையை சாப்பிடும் போதும்,

*ஹரே ராம ஹரே ராம*
*ராம ராம ஹரே ஹரே |*
*ஹரே க்ருஷ்ண ஹரே க்ருஷ்ண*
*க்ருஷ்ண க்ருஷ்ண ஹரே ஹரே ||*

இந்த மந்திரத்தை மனதால் இரு முறை சொல்லவும் அல்லது தனக்கு விருப்பமான பகவன் நாமாவை கூறிக் கொண்டு உணவை மென்று சாப்பிட வேண்டும். இந்த மந்திரத்தில் மொத்தம் 16 பகவன் நாமங்கள் உள்ளன. இருமுறை கூறப்படும்போது 32 திருநாமம் வரும். நமது வாயில் 32 பற்கள் உள்ளன. ஆகவே மந்திரத்தின் ஒவ்வொரு திருநாமத்திற்கும் ஒருமுறை என்ற விதத்தில் 32 முறை மென்று சாப்பிடுவதால் உணவு நன்கு அறைக்கப்பட்டு ஜீரணிக்க மிகவும்

உபகாரமாக அமைகிறது. ஆரோக்யத்தை அளிக்கிறது. இவ்விதம் சாப்பிடுவதால் சிறிது அளவு உணவிலேயே திருப்தி ஏற்படும். உணவின் சக்தியும் முழுவதும் கிரஹிக்கப்படும். மேலும் உண்பதும் பஜனையாகிவிடும்.

உண்ணும்போது ஒவ்வொரு தடவை விழுங்கும்போதும், ஒவ்வொரு பிடி உணவிற்கும் பகவன்னாமம் கூறிக் கொண்டு உண்போமேயாகில், அன்ன தோஷமும் விலகுகிறது.

ஆசிரியர்: ஸ்வாமி ஸ்ரீ ராம்ஸுகதாஸ்.

# கோரக்பூர் கீதாப்ரஸ்ஸின் நன்மை பயக்கும் இலக்கியங்கள்

**கீதா மாதுர்யம்**
ஆசிரியர்: ஸ்வாமி ஸ்ரீ ராம்ஸுகதாஸ்

**பசு பராமரிப்பின் நற்பயன்கள்**

## விரைவில் வெளிவர இருப்பவை

**ஸந்த்-வாணி**
[சான்றோர்களின் அருளுரைகள்]

**சரணாகதி**
ஆசிரியர்: ஸ்வாமி ஸ்ரீ ராம்ஸுகதாஸ்

**உருவ வழிபாடு**
ஆசிரியர்: ஸ்வாமி ஸ்ரீ ராம்ஸுகதாஸ்

**தூய்மையான உணவுப் பழக்கம்**
ஆசிரியர்: ஸ்வாமி ஸ்ரீ ராம்ஸுகதாஸ்.

**கீதை கற்பதின் பயன்கள்**
ஆசிரியர்: ஸ்ரீ ஜயதயால்ஜீ கோயந்தகா